ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீனிவாச கல்யாணம் அல்லது திருப்பதி வெங்கடாசலபதி அலர்மேல் மங்கை திருக்கல்யாண மாஹாத்மியம்.

By

**V. K. SESHADRI IYENGAR,**

SANNADHI STREET,
TIRUCHANOOR, TIRUPATHY. P. O,

1946.

 [Price As 6 only






ஸ்ரீராமஜெயம்.



ஸ்ரீ வேங்கடேச பரப்பிரம்மணேநம.

# ஸ்ரீ திருப்பதி வேங்கடாசலபதி
# புராண க்ஷேத்திரஸ்தல மஹாத்மிய வைபவம்

## ஸ்ரீவேங்கடேஸ்வர தோத்திரம் .

நாரயணாவென பாராணம் பண்ணும் நாள்களிலே
வாராதசெல்வமும் வந்திடுமே வளர் ஆயுளுமே
தீராதரோகமும் திசைதப்பிப் போய்விடும் தேமஙள
வாராற்திருப்பதி வாழ்வெங்கடாசலவள்ள்ளலின்றே

ஸ்ரீனிவாஸபரப்ரம்ஹணே நம:

வக ஸ்ரீவெங்கடேச ஸுப்ரபாத ப்ராம்ப:

கௌஸல்யா ஸுப்ரஜாராம - பூர்வாஸந்தியா பிரவர்த்தே

உத்திஷ்டா நாசார்துலாந் -கர்த்தவியம் தைவமாஹ்னிகம்

உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த - உத்திஷ்ட கருடத்வஜ
உத்திஷ்டகமலா காந்தா - த்ரைலோக்யம் மங்களம்குரு 2

மாதஸ்ஸமஸ்த ஜகதாம் - மதுகைடபாரே
ர்வக்ஷோவிஹாரிணி - மனோஹர திவ்யமூர்த்தே
ஸ்ரீஸ்வாமினி, ஸ்ருதஜனப்பிரயாதான சீலே
ஸ்ரீ வெங்கடேசதயிதே - தவஸுப்ரபாதம். 3

தவஸுப்ரபாத மரவிந்தலோசனே
பவதுப்ரசன்னமுகசந்திரமண்டலே
விதி சங்கரேந்திர வனிதாபிரர்சிதே
விருஷசைலநாத தயிதே தயாநிதே 4

அத்ரியாதி சப்தருஷயஸ்ஸமுபாஸ்யசந்தியாம்
ஆகாசஸிந்து, கமலானி மனோஹராணி
ஆதாயபாதயுக மர்ச்சயிதும் பிரஸன்ன
சேஷாத்ரி சேகரவிபோ - தவஸுப்ரபாதம். 5

பஞ்சானனுப்ஜபவ ஷண்முக வாஸவாத்யா:
த்ரைவிக்ரமாதி சரிதம் விபுதாஸ்துவந்தி
பாஷாபதி; படதிவாஸரஸுத்திமாரா
சேஷாத்ரி சேகரவிபோ - தவஸுப்ரபாதம் 6

ஈஷத்ப்ரபுல்ல - ஸரஸீருஹ நாரிகேள
பூகத்ருமாதிஸுமனோஹர - பாளிகானும்
ஆவாதிமந்தமனில-ஸ்ஸஹ திவ்யகந்தை:
சேஷாத்ரிசேகரவிபோ - தவஸுப்ரபாதம் 7

உன்மில்யநேத்ரயுக - முத்தமபஞ்சரஸ்தா
பாத்ராசிஷ்டகதளீ - பலபாயஸானி
புக்த்வாஸலீல்மதகேள சுகா: படந்தி
சேஷாத்ரி சேகரவிபோ - தவஸுப்ரபாதம் 8

தந்திரீப்ரகர்ஷ - மதுரஸ்வனயா விபஞ்சியா
காயத்யனந்தசரிதம் - தவநாரதோபி
பாஷாஸமக்ர - ஸக்ருத்கரசாருரம்யம்
சேஷாத்திரி சேகரவிபோ - தவஸுப்ரபாதம் 9

ப்ருங்காவளீ சமகரந்த ரசானுவித்த
ஜும்காரகீதநினதை: ஸஹஸேவநாய
நிர்யாத்யுபாந்த - ஸரஸீகமலோதரேப்ய
சேஷாத்ரி சேகரவிபோ - தவஸுப்ரபாதம் 10

யோஹாககணேன - வர்தத்னி - விமன்யமானே
கோஷாலயேவ - ததிமந்தன திவ்ரகோஷா:
ரோஷாத்கலிம் விதகே: ககுபஸ்சகும்பா
சேஷாத்ரி சேகரவிபோ - தவஸுப்ரபாதம் 11

பத்மேசமித்ர சதபத்ர - கதாளிவர்கா
ஹந்தும் - ஸிரியம் - குவலயஸ்ய - நிஜாங்க லக்ஷ்மிய:
பேரிநிநாதமிவபிப்ரித - தீவ்ரநாதம்
சேஷாத்ரிசேகரவிபோ - தவஸுப்ரபாதம் 12

ஸ்ரீமன்னபீஷ்டவரதாகில - லோகபந்தோ
ஸ்ரீனிவாஸ ஜகதேக - தயைகஸிந்தோ
ஸ்ரீதேவதாக்ருஷ புஜாந்தர - திவ்யமூர்த்தே
ஸ்ரீவேங்கடாசலபதே - தவஸுப்ரபாதம் 13

ஸ்ரீஸ்வாமிபுஷ்கரணி காப்லவ நிர்மலாங்கா
ஸ்ரேயோர்திஞேஹர - விரஞ்சிஸ நந்தனுத்யா:
ஸ்ரீவேங்கடாசலபதே - தவஸுப்ரபாதம் 14

ஸ்ரீசேஷசைல நடாசல - வேங்கடாத்ரி
நராராயணாத்திரி - வருஷபாத்ரி - விருஷாத்திரிமுக்கியாம்
ஆக்யாம் த்வதீயவஸதோ - ரநிசம்வதந்தி
ஸ்ரீவேங்கடாசலபதே - தவஸுப்ரபாதம் 15

சேவாப்பராஷிவஸுரேச - க்ருசானுதர்மன்
ரக்ஷோம்பு நாதபவமான - தனாதிநாதா:
பத்தாஜலி ப்ரவிலஸன்னி ஜசீர்ஷதேசா
ஸ்ரீவேங்கடாசலபதே - தவஸுப்ரபாதம் 16

தாடீஹுதே விஹகராஜ. ம்ருகாதிராஜ
நாகாதிராஜ - கஜராஜ - ஹயாதிராஜா.
ஸ்வஸ்வாதிகார - மஹிமாதிக மர்தயந்தே
ஸ்ரீவேங்கடாசலபதே - தவஸுப்ரபாதம் 17

சூர்யேந்துபௌம - புதவாக்பதி காவ்யசௌரி
ஸ்வர்பானுகேது - திவிஷத பரிஷத்ப்ரதானு
த்வத்தாஸ - சரமாவதிதாஸ - தாஸ
ஸ்ரீவேங்கடசலபதே - தவஸுப்ரபாதம் 18

த்வத்பாததூளி - பரிதஸ்புரி தோத்தமாங்கா:
ஸ்வர்காபவர்க - நிரபேக்ஷ - நிஜாந்தரங்கா:
கல்பாகமாகலநயா - குலதாம் - லபந்தே
ஸ்ரீவேங்கடாசலபதே - தவஸுபரபாதம் 19

த்வத்கோபுராக்ர - சிகராணி நிரீக்ஷமாணு
ஸ்வர்காபவர்க - பதவீம் பரமாஸ்ரயந்த:
மர்தயாம் - மனுஷ்ய - புவனே - மதிமாஸ்ரயந்தே
ஸ்ரீவேங்கடாசலபதே - தஸுப்ரபாதம் 20

ஸ்ரீபூமிநாயக - தயாதி - குணாம் ருதாப்தே
தேவாதிதேவ - ஜகதேக - சரண்யமூர்தே
ஸ்ரீமங்கனந்த கருடாதிபி - ரர்சிதாங்க்ரே
ஸ்ரீவேங்கடாசலபதே -தவஸுப்ரபாதம் 21

ஸ்ரீபத்மனுப - புருஷோத்தம - வாஸுதேவ
வைகுண்டமாதவ - ஜனர்தன - சக்ரபாணே
ஸ்ரீவத்ஸசிஷ் - சரணுகத - பாரிஜாத
ஸ்ரீவேங்கடாசலபதே - தவஸுப்ரபாதம் 22

கந்தர்ப - தர்பஹர - திவ்யமூர்தே
காந்தா குசாம்புருஷ - குட்மலலோலதிருஷ்டே
கல்யாண - நிர்மல - குணாகரதிவ்ய - கீர்தே
ஸ்ரீவேங்கடாசலபதே - தவஸுப்ரபாதம் 23

மினுக்ருதே - கமடகோல - ந்ருஸிம் ஹவர்ணின்
ஸ்வாமிந் - பரஸ்வத - தபோதன - ராமசந்திர
சேஷாம்சராம - யதுநந்தன - கல்கிரூப
ஸ்ரீவேங்கடாசலபதே- தவஸுப்ரபாதம் 24

யேலாலவங்க - கனஸார - சுகந்ததீர்தம்
திவ்யம் - வியத்ஸரிதி - ஹேமகடேஹு பூர்ணம்
த்ருத்வர்த்ய - வைதிக - மணய: ப்ருஷ்ருட்டாத்தி
ஷ்டந்தி - வேங்கடபதே - தவஸுப்ரபாதம் 25

லக்ஷ்மீநிவாஸ - நிரவத்ய - குணைகசிந்தோ
சம்ஸாரஸாகர - சமுத்தரணை கபோத
வேதாந்தவேத்ய - நிஜவைபவ பக்தபோக்ய
சேஷாத்திரி சேகரவிபோ - தவஸுப்ரபாதம் 26

பாஸ்வானுதேதி - விகசானி - ஸரோருஹாணி
சம்பூர்ணயந்தி நினதை: - ககுபோ - விஹங்கா:
ஸ்ரீவைஷ்ணவாந் - ஸததமர்தித மங்களாஸ்தே
தாமாஸ்ரயந்தி - தவ - வேகடஸுப்ரபாதம் 27

கத்தம்விருக்ஷாசலபதே - ரிஹஸுப்ரபாதம்
யேமானவா - பிரதிதினம் - படிதும் - பிரவர்தா:
தேஷரம் பிராபதஸமயே - ஸ்முருதிரங்கபாஜாம்
பிரக்ஞாம், பரார்தஸுலபாம் , பரமாம் - ப்ரஸுதே.

அலர்மேலு மங்கையை மார்பில் அணிந்து பக்தகோடி களுக்கு உண்டாகும். பிணி பயம் ஜனனமரண துக்கங்களை போக்கி ரக்ஷிக்கும்பொருட்டாக ஸ்ரீ திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்தில் நின்றபக்தகோடிகளுக்கு அநந்தத்தை விளை விக்கும் அமிர்தமாகயிருக்கின்றது உன்சரித்திரங்களை கேட் பது காதுக்கு ரத்னுபாணங்களாக இருக்கிறது உன்பூஜை கள் கைகளுக்குபொன்பூஷணங்களாக இருக்கின்றது. உன் னை நினைப்பது இசபரலோகங்களில் சர்வசுகங்களை அடை வதற்கு காரணமாக யிருக்கின்றது. உன் தரிசனம் சர்வபாவ ங்களைபோக்கி சாக்ஷாத் பரமபதபிராப்திக்கு மூலமாய் இரு ப்பதால் ஒபக்தகோடிகளேகேளும்.

## நைமிசாரண்யத்தில் பிரஸ்தாபனை.

சௌனகாதிமுநிகள் சூதமாமுனியால் சகலபுராணங் களையும்விசித்திரநடனசிகாமணியாகியஎம்பெருமான்கதை களைக்கேட்டு ஆநந்தகடலில் மூழ்கினவர்களாய் முடிவிலிவ் வாறு சொல்லத்தொடங்கினர். ஒசூதமாமூனியேஇவ்வுல கத்தின்கண் 108 திருப்பதிகள் உண்டல்லவா அவைகளில் ஸ்ரீரங்கம் ஸ்ரீமுஷ்டம், தோதாத்ரி, சாலக்கிராமம், நைமிசம், பதரிகாஸ்ரமம், காஞ்சீபுரம், வெங்கடாசலம்என்னும்முக் கியதிருப்பதிகளில் வெங்கடாசலம் என்கிற இத்திருப்பதி எல்லா திருப்பதிகளிலும் மிகவும் மேலானதாக எப்படி ஆயிற்று தயவுசெய்துவிவரிப்பாய்.

## ஸ்ரீசூதமாமுனியன் வாக்கியம்.

ஒ முனிகளேகேளும் ஸ்ரீமன்நாராயணன் சகலசராசரங் களுக்கு ஆதாரமானவனுகவும் பிறப்பு இறப்பு இல்லாதநித் தியானந்தமூர்த்தியாய் அனந்தகல்யாணகுண அக்ஷயமங் கள சொருபனுய் இருக்கின்றுன். பார்க்கடலில்நிர்மலமான அந்தக்கருணனுய் ஆதிஷேனுடைய ஆயிரம் தலைகள் என்னும் மாணிக்கங்களால் அலங்கரிகப்பட்டுஇடதுபுரத் தில்மகாலக்ஷ்மியும் நாபியில் பிரம்மதேவனும் பிரகாசிக்க அவர் பெருமையைசொல்வதர்க்குநாரதர்பராசர்வியாசர் அம்பரீஷன்முதலிய மகாமுனிகளால் முடியாமல் இருக்க என்னுல்முடியுமோ ஆனுலும் லக்ஷிமிபதியாகிய எம்பெரு

மான் உங்களையும் என்னையும் உலகத்தில் சர்வஜீவகோடி களையும் ரக்ஷிப்பார் ஆகையால் என்சக்திக்கு தக்கபடி சொல்லுகிறேன்சந்தோஷமாககேளீர்.

## பிரம்மாவின் பிரப்பு.

ஆதியில்பார்க்கடலில் சயனித்திருக்கும்எம்பெருமான் திருநாபிகமலத்தில் சதுர்முகபிரம்மா பிறந்து சகலலோக கங்களைசிருஷ்டிசெய்தார். நாலாபிரம்யுகங்கள் அவ்வுலகங் களைரக்ஷிக்க பிரம்மாவின் பகல்முடித்துவிட்டது. அப்பொழுது இரவுவர பிரம்மா தூங்கிவிட்டார். இருள் எங்கேயும் நிறைந்துகொண்டது சூரியன் அக்கினியை அளவில்லாமல் பூமியின்மேல்வீசினன். அதனால் ஸ்தாவரஜெங்கமெல்லாம்அடங்கிபோய்விட்டது இருண்டமேகங்கள் அபாரமாக ஆகாயத்தில்வருஷங்களைக்கொட்டதொடங்கிற்று அந்தஜல பெருக்கினல்உலகமெங்கும் ஜலம் நிரம்பிவிட்டது அப் போதுநீர்பளுவுக்குதாளாமல்கபூமிடலுக்குள்மூழ்க இரண் ணியாக்ஷதன் என்னும் ராக்ஷஸன் அதைரஸாதலலோகத் திற்க்கு கொண்டுபோய் அநேககாலமாய் அனுபவித்துக்கொண்டிருந்தான். இப்படியிருக்க, பிரம்மாவின் இரவு காலம் முடிந்து பகல்வருகிறசமயத்தில் மறுபடியும் பிரம்மாவைஎழுப்பவதற்க்கும் சிருஷ்டி உண்டாக்குவதற்கும் எண்ணம்கொண்டு ஸ்ரீமன்னாராயணன் சுவேதவராக அவதாரத்தைஎடுத்தார்.

## வராக அவதாரம்

கண்ணைமூடி திறக்கிறகாலத்துக்குள்ளாக ஆகாயம் பூமி நிறைந்து விட்டதைப்போல் பயங்கரமாகிய கோரைகளுடன்வராகவதாரத்தைகொண்டுஈரேழபதினுன்குலோகங்கள்கிடுகிடென்று நடுங்ககர்ஜனை செய்துக்கொண்டு பூமியைமறுபடியும்எடுத்துகொண்டுவர கடலில் பிரவேசித்தார் அப்போதுரஸாதலத்திற்குப்போககோபமுள்ளவனுய்வீராவேசத்துடன் அந்தராக்ஷஸவீரன் சண்டைக்கு வந்தான், ஹரிசண்டையில்அவன்சிரத்தைதுண்டுதுண்டுகளாகபயங்கமான கோரைகளல் கிழிக்கஅந்தராக்ஷஸன் மடியரக்தமான துபிரவகாங்ளாககடலெல்கும் நிரம்பிவிட்டது அதைப்பார்

ந்து சித்தசாத்தியமுதலிய தேவகணங்கள் நடுங்கிவிட்டன்று நடுங்கிவிட்டார்கள் அப்போது பூமியை மருபடியும் நிலைநிருத்திபிரம் மாவைஎழுப்பி சிருஷ்டிசெய்யும்படி உத்திரவுசெய்தார். தேவகணங்க ள் அந்த வராகமூர்த்தியின்பேரில் புஷ்பங்களை வருஷித்து ஜெயஜெய ஹரியென்று சப்தம்செய்தார்கள்.

## கருடருடன் சம்பாஷணை

இவ்விதமாக வீராதிவீரனுகிய ஹரி தன்காரியம்முடிந்தபிறகு திரும்பிபார்க்கையில் கைகளைகட்டிக்கொண்டு சரணுகதனுகநின்றிருந்த கருத்மந்தனைப் பார்த்து இவ்விதமாக சொன்னுர். ஒபக்ஷேந்திரனே பயங்கரமாகிய கோரைகளுடன் மேருபருவத்தைப்போன்ற ஆகாரத் துடன் எவ்விதமாக நான் வைகுண்டத்திற்கு வருவேன் லக்ஷ்மிதேவி என்ரூபத்தைப்பார்த்து பயப்படாதோ ஆகையால் நான் யிவ்வுலகத்தி லேயேநின்று விடுவேனுசவும், இப்படிசொன்ன ஹரியினுடைய வாக்கியங்களுக்கு ஆச்சர்யப்பட்டுக்கொண்டு பக்ஷீந்திரன் ஓ சுவாமி! உங்கள்ஹிருதயத்திலேயே லக்ஷ்மிதேவி எப்போதும் குடியிருக்க என்பயப்படுவார் தாங்கள் பூமியைஎடுக்கும் காரணத்துக்காக பயங்கர மானஅவதாரத்தைக் கொண்டீரே தவிர மற்றென்றும்இல்லை ஆகை யால்தயவுசெய்து வைகுண்டம் வருவீரென்று பிரார்த்தித்தான் அதற் குஎம்பெருமான் ஓ பக்தசிகாமணியே என்பக்தகோடிகளை விட்டு நான் எவ்விதமாய் இருப்பேன். அவர்களை ரக்ஷிக்கும் பொருட்டாகவும் அர்களுக்கு நேரிடும் இடையூறுகளைப்போக்கி ஆதரிக்கும் பொருட்டா கவும் அவர்களுக்கு என்தரிசனத்தினுலும் கிருபாகடாக்ஷத்தினுலும் பாவங்களைப் போக்கபரிசுத்தர்களாசச்செய்து வைகுண்டபிராப் தியைத் தருவதற்காகவும் உலகத்தில் தருமவிரோதிகளையும் கொரே மானவர்களையும் ராக்ஷஸர்களையும் கொன்று தருமபரிபாலனம் செய்த வர்காகஇவ்வுலகத்திலேயே நிற்பேன். ஆகையால் நீவைகுண்டத்திற்கு ப்போய்லக்ஷ்மிதேவியிடன்என்வார்த்தைகளைச் சொல்லி கிரீடாசலத்தை உன்சிரத்தின்பேரில் வைத்துகொண்டுகூடியசீக் கிறத்தில் வருவாய், இவ்விதமாகச்சொல்லி ஸ்ரீமந்நாராயணன்தான் நிற்பதற்குநல்ல இடத்தை தேடிக்கொண்டு கௌதமியாற்றிற்குசமீபத்திற்குதெற்கில் சுவர்ணமுகி யாற்றிற்கு வடக்கில்திவ்யஸ்தலத்தைப் பார்த்து பக்ஷிபதி யைஎதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

## கருத்மந்தன் லக்ஷ்மிதேவி சம்பாஷணை

கருத்மந்தன் வைகுண்டத்துக்கு போய் லக்ஷ்மிதேவியை கண்டு சாஷ்டாங்க தெண்டமிட்டு இவ்வித்மாக சொல்ல தொடங்கினுன். ஈரேழு லோகங்களையும் ரக்ஷிக்கும் லோகமாதாவே ஜலத்தில் முழுகின

உலகத்தை மறுபடியும் கொண்டுவருவதற்காக பயங்கரமாகிய வராக வதாரம்எடுத்து இரண்ணியாக்ஷனைகொன்று உலகத்திலேயே நிற்கும் பொருட்டாக கிரீடாசலத்தை என்சிரத்தின்மீது கொண்டுவரும்படி யாக்யாபித்தார் ஆகையால் மனவுசெய்தேன் என்றுசொல்ல லக்ஷ்மி தேவி அந்த பயங்கரமாகி ரூபத்தைதரிசிக்க ஆவலுடையவளாய்யிருக் கின்றேன் ஆகையால் ஸ்ரீஹரியைசீக்கிரத்தில் அழைத்து கொண்டு வரும்படிசொல்ல அதை கேட்டுகருத்மந்தன் தாயே? நான் இவ்விடம் வரச்சொல்லி எவ்வளவுசொல்லியும் அவர்கேட்காமல் பக்தகோடிகளை ரக்ஷிக்கும்பொருட்டாக உலகத்திலேயே நிற்பேன்யென்றும் வைகு ண்டம்வந்தால் தன்பயங்கரமாகியரூபத்தைதாங்கள்பார்த்து பயப்படுவீர் களென்றும் சொன்னர். அதைகேட்டு லக்ஷமிதேவி மிகவும்யாச்சர்யப் பட்டு ஓ பக்ஷிராஜனே! அந்தபகவானுடையமார்பில் குடிஇருக்கும் நான் ஏன்பயப்படுவேன் அங்குஷ்டமாத்திரராய் சயனித்தபோதும் கூர்மாவதாரம் முதலிய அவதாரங்கள் எடுத்தபோதும் அவர்க்குள் நானி ருந்தேன் இதை அவர்யரிந்தும் அவ்விதமாய்ச்சொன்னது ஆச்சசரியம். அவர் இவ்விடம்வராமல் போனாலும் நான் அவ்விடம் வருவேன் என்றுசொல்லி தான்ஒருகளையோடு கிரீடாசலம்ஏரியதை கருத்மந்தன் ஸ்ரீஹரி சந்நிதானத்திற்கு கொண்டுவந்தான். அப்போது முப்பத்து முக்கோடி தெய்வங்களும் மும்மூர்த்திகளும் யத்திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்துக்கு வந்து பகவானை யனேகவிதமாக கொண்டாடினார்கள் ஓசுவாமி லக்ஷ்மிதேவியை மார்பில்யணிந்து உங்கள் சௌமியரூபத்தை தரித்துஉலகத்திலேயே நின்றுராக்ஷஸர்களையும் துன்மார்க்கர்களையும் கொன்று பக்தகோடிகள்யுடைய பாவங்களைப்போக்கி ரக்ஷிப்பாய் சரணம் சரணம் என்று ஓசைவிட்டார்கள். அதற்கு பகவான்பயமேன்று சொல்லி பக்தகோடிகளை ரக்ஷிப்பேனென்று பிரதிக்கினை செய்தார்.

## ஸ்ரீ திருப்பதியின் யுகங்கள் பேர்

கிருதாயுகத்தில் விருஷபாசுரன் என்கிறராக்ஷஸன் பகவானோடு சண்டைசெய்து மடிந்தபடியால் விருஷபாத்திரி என்றுபெயர், த்ரேதாயுகத்தில் அஞ்சனாதேவி குழந்தைகள் இல்லாமல்மதங்கமாமுனி சொன்னதைப்போல் ஸ்ரீமந்நாராயணன் பாதகமலங்களை தொழுதிரு ந்துவாயு அனுக்கிரகத்தினாலே அனுமாரை பெற்றதினால் அஞ்சனா சலம் என்றும் பெயர் துவாபரயுகத்தில் ஆதிசேஷனுக்கும் வாயுபக வானுக்கும் பலா பலங்களைப்பற்றி வாதம்நேரிடஆதிசேஷன் மலை யைச்சுற்றிக்கொள்ள அதை வாயுபகவான் அப்புரம்எறிந்து விட்டபடி யால்ஆதிசேஷன்வைகுண்டத்துக்குபோக வெட்கபட்டுஇவ்விடத்திலே யேஅந்தர்தானமானபடியால்யிதற்குசேஷாத்திரி என்றுபெயர் கலியுக த்தில் ஸ்ரீமந்நாராயணன் லக்ஷிமிசமேதராய் இவ்விடம் நின்று பக்த கோடிகளுடையபாவங்களை தகித்து, மோக்ஷத்தை குடுப்பதினால் வெங்கடாசலம் என்று பெயர்.

## புஷ்கரணி மஹாத்துவம்.

ஈஸ்வரனை அடைந்து கங்காபவானி ஸமஸ்த தீர்த்தங்களிலும் மேலான நதிரூபமாய் இருப்பதைக்கண்டு ஸரஸ்வதி அக்கங்கையைப்பார்க்கினும் புண்ணிய பிரதமான நதிரூபமாக இருக்கயெண்ணி ஸ்ரீஹரியைகுரித்து தவம் செய்தாள். அப்போது தன்புத்திரனான புலஸ்தியபிரம்மா அவ்விடம்வர தன்புத்திரனென்றெண்ணி மரியாதைசெய்யாமலிருந்தாள், அவரதற்கு கோபித்துக்கொண்டு உனக்குஸர்வதீர்த்தோத்தமநதீரூபமுண்டாகாமல் போகக்கட்வதென்று சாபம் கொடுத்தார். பிறகு நாராயணமூர்த்தி பிரசன்னராகஅவரைக்கண்டு நமஸ்கரித்து தன்மனோபிப்ராயங்களைசொல்ல அவர் நீபுலஸ்திய பிரம்மாவால் உண்டானசாபத்தால் ஸர்வோத்தம நதிரூபமாகமாட்டாய். ஆனால்சேஷாசலத்தில் சரோரூபமடைந்து ஸமஸ்த்ததீர்த்தங்களில் சிரேஷ்டமுடையவளாய் ஸ்நானஞ்செய்தவர்களுக்கு சகல பாபங்களை நசிக்கசெய்தால் உன்னிடத்தில் சமஸ்ததீரத்தங்களும் மார்கழிமாதத்தில் ஸ்நானஞ்செய்ய தம்மிடத்தில் பாபாத்துமாக்கள் ஸ்நானஞ்செய்து வருகிறதினாலுண்டானபாவங்களை நிவர்த்தியடைவார்களென சரஸ்வதி சரோரூபமாக அவதரித்து சுவாமிபுஷ்கரணியென விளங்குகிறாள்.

ஓ சௌனகாதி முனிவர்களே, ஸ்ரீமந்நாராயணன் லக்ஷ்மி நீளாதேவியுடன் கூடி புஷ்கரணியில் கிரீடிப்பதினால் இதுபரிமளமாகவும் சுப்பிரமாகவும் இருக்கின்றது. கோடிதீர்த்தங்களைப்பார்க்கிலும் மேன்மையுடையதாய் பக்தகோடிகளுக்கு நன்மையுண்டாக்குவதில் கர்ப்பகவிக்ஷத்தைப் போலிருக்கின்றது. பானமும் தரிசனமும் பாவங்களைப் போக்கி பரிசுத்தர்களாக பக்தர்களைச்செய்ய அவ்விடத்திலேயே குடியிருந்து தபஜபங்களும் ஸ்நானபானங்களும் செய்துக்கொண்டிருக்கும் தன்யர்களுடைய பலத்தை என்னசொல்லலாம். நல்லோர்களுக்கும் தேவர்களுக்கும் ஸ்திரவாசமாகிய இப்புண்ணிய புஷ்கரணியில் ஸ்நானம்செய்து பாவங்களைப்போக்கி அளவற்றபுண்ணியங்களை உண்டாக்கும். புஷ்காணிதீர்த்தம் ஒருதீர்த்தமாகவே தோன்றினாலும் அதில் ஒன்பதுதீர்த்தங்கள் அந்தர் பூதமாய் இருக்கின்றது. அவைகள் யாவன, குபேர. காலவ-மார்க்கண்டேய-அக்கினி-எம-வசிஷ்ட-' வாயு வருணசரஸ்வதி தீர்த்தங்களாகும்.

## ஸ்ரீ திருப்பதி மலையின் பிரதாபம்.

புண்ணியர்களுக்கு இது தங்கத்தைப்போல் மின்னிக்கொண்டும் பாவிகளுக்கு பார்க்கவேபயமுருத்துக்கொண்டும் இருக்கும் கலியுகத்தில் கர்களாய்தோன்றி துன்மார்கர்களுக்கு இருண்டதாயிருக்கும். லக்ஷ்மி வாசகமாய் கோடிபக்தர்களுக்காகிலும் குறைவில்லாததாய் இருக்கும், ஞானிகளுக்கும் யோகாப்யாசிகளுக்கும் அஷ்டமாஸி சித்தர்களுக்கும் முக்கிய ஸ்தானமாகவும், சித்தை உண்டாக்கும் புண்ணிய க்ஷேத்திரமாக இருக்கும்.

## ஸ்ரீதிருப்பதி அனந்தநாமம்.

கருத்மந்தன் கொண்டுவந்ததினுல் கருடாசலமென்றும் சிந்தனைகளை தீர்க்கும் ஆகையால் சிந்தாமணியென்றும், ஸ்ரீராமர் பூர்வத்தில்வந்ததினுல் ராமகிரியென்றும், கிருஷ்ணமூர்த்தி திவநததினுல் கிருஷ்ணகிரியென்றும், நரசிம்மமூர்த்தி இரண்ணியனைக் கொன்றதினுல் நரசிம்மாசலமென்றும்,பக்தகோடிகளுக்கு சாமிதார்த்தங்களை கொடுப்பதினுல் கர்பகிரியென்றும், கனகம் நிரைந்ததாகையால் கனககிரியென்றும், ஞானிகளுக்கு ஞானம் அதிசரிப்பதினுல் ஞானுத்ரியென்றும், நீலனென்பவன் குடியிருந்ததினுல் நீலகிரியென்றும். லக்ஷ்மிவசிப்பதினுல் ஸ்ரீநிவாசமென்றும், நாராயணன் தவம்செய்ததினுல் நரயணகிரி யென்றும், சர்வபுண்ணிய தீர்த்தங்கள் இருப்பதினுல் தீர்த்தகிரியென்றும், வைகுண்டத்தில் இருந்துவந்ததினுல் வைகுண்டகிரி யென்றும், புஷ்கரணியிருப்பதினுல் புஷ்கரகிரி யென்றும்பெயர்.

## சோழராஜன் சாபம் அடைதல்

ஸ்ரீபூதேவி நீளாதேவி சமேதாராய ஹரி நித்திய முக்தர்களைப் பார்க்கப் பிரியமுள்ளவராய் வைகுண்டத்திற்குப்போக சேஷாத்திரியிலிருந்தவராகமூரத்தி விஸ்வகர்மாவால் ஏர்படுத்திய நகரத்தை அந்தர்தானம்செய்து இச்சாவிஹாரமாய் திரிந்துக்கொண்டிருந்தார். அதை திரிலோகஸஞ்சாரியும், திரிகாலக்ஞானஸம்பன்னனும், ஸர்வஜீவதயாபருமாகிய நாரதமாமுனி அரிந்து பிரம்மாவுக்கு தெரிவிக்க அவர் ஸ்ரீஹரி பூமியில் இருந்தபரியந்தம் ஜனங்கள் ஸ்த்துவகுண முள்ளவர்களாய் பாபவிமோசனர்களாய் பரிசுத்தாகளாயிருந்தார்கள். ஸ்ரீஹரி இல்லாமற்போனுல் கலியுகமாயை மேலிட்டு பாவங்களின் பெருக்கினுல் நரகபிராப்தி யடைவார்களாகையால் நீஸ்ரீஹரியையமறுபடியும் வரவழைக்க ஏதாவது நல்லவுபாயம் செய்யவேண்டுமென, ஜான்னவி ஆற்றங்கரையில் கஸ்யுபாதி முனிகள் எக்கியம்செய்ய அவர்களிடம் நாரதர்போய் எக்கியபலத்தை யாருக்கு தருவீரென்றுகெட்டார். திருமூர்த்திகளில் மோக்ஷத்தை கொடுக்ககூடிய கடவுள்யாரோ அவருக்கு தருவோமென்றுசொல்லி அதை விசாரிப்பதற்காக பிருகுமாமுனியை அனுப்பினுர்கள். அவர் சத்தியலோகம்போய் தபோஜனங்களுடன் கொலுவிருந்து பிர்ம்மாவைப்பார்த்து கும்பிட்டு உட்கார்ச்சொல்லுவதற்குமுன்பாக உட்கார்ந்தினுல் பிரம்மா கோபம் அடைந்தார்.அதைபார்த்து பிரம்மாரஜோகுணத்தாரென்றும் ஆகையால் அவருக்கு தேவாலயமில்லையென்றும் நிச்சயித்து கைலாயத்திற்குபோய் பார்வதிசமேதராம் கிரீடித்துக் கொண்டிருந்த சிவபெருமான் அரண்மனைக்குள் நுழைந்து திடீறென்று நிற்க பார்வதிதேவி வெட்கமடைய

அதற்கு கோபத்துடன் கண்கள் இரத்தத்தைப்போல் சிவந்திருப்பதை பார்த்து சிவபெருமான் தமோகுணரென்றும், ஆகையால் அவருக்கு தேகைபூஜையில்லாமல் லிங்கபூஜை உண்டாயிருக்கிறதென்றும் அறிந்து பிறகுவைகுண்டத்திற்குப்போய் ஸ்ரீ லக்ஷிமிசரமதராகிய பெருமானை காலால் மார்பிலுதைக்க அவரதற்கு அந்தமகாமுனிகளுடைய காலுக்குநோய் உண்டாயிருக்குமென்று ஆதரிக்கமுனிவர் விஷ்ணுவே சத்துவகுணத்தாரென்றும் மோட்சத்தைகொடுக்க கூடியவரென்று நிச்சயித்தார். அப்பொழுது மார்பிலிருந்தலட்சுமிதேவி கோபித்துக் கொண்டு கொல்லாபுரம் வந்து சேர ஹரி திருப்பதியில் பாம்பு புத்தில் லட்சிமியை பிரிந்த விசனத்துடன் வந்திருந்தார். அப்பொழுது பிரம்மாவும் ருத்திரனும் பசு கன்று ரூபங்களை தரித்து சோழராஜாவின் பசுமந்தைகளில் சேர்ந்து புத்தினிடம்வந்து க்ஷீரத்தால் ஹரியை திருப்தி செய்துக்கொண்டுவர பசுவுக்கு பாலில்லாமல் போவதை சோழராஜ மனைவி யரிந்து அதைக் கண்டுபிடிக்கும்படி இடையனுக்கு உத்தரவு செய்தாள், பசுவுபாலை புத்திலிடுவதைக்கண்டு இடையன் கோபித்துக் கொண்டு தன்கோடலியால் நெற்றியின்மேலடிக்க ஹரிதன் சிரசை கொடுத்தபடியால் அடிப்பட்டு ரத்தபிரவாகம்வர அதைக்கண்டு பயந்து இடையன் மடிந்தான். அதைவிசாரிப்பதற்கு சோழராஜாவர அவர் பேயாக போகக்கடவதென்று சாபம் கொடுத்தார். அப்பொழுது அந்தராஜன்கண்டு நடுங்கி தன்சாபவிமோசனமாவதற்கு வேண்டினதற்கு ஸ்ரீ ஹரி நீ இந்த சாபத்தை கலியுகமிருக்கும் பரியந்தம் அனுபவிக்க கடவாய், ஆனால் நான் ஆகாசராஜனுடைய புத்திரியான பத்மாவதியை விவாஹம் செய்வேன். அப்பொழுது நவரத்னகசிதமான கிரீடம் செய்து எனக்கு சமர்ப்பித்தால் அதை நான் வெள்ளிக்கிழமை தினங்களில் ஆருநாழிகை தரிப்பேன். அந்த காலம் மாத்திரம் உனக்கு பிசாசரூபத்தால் கஷ்டம் நேரிடாதென்றார்.

## ஸ்ரீ ஹரி வராஹஸ்வாமியை சந்தித்தல்.

அதற்கு பின்பு ஸ்வாமி தன் சிரத்தில பட்ட அடியால் நோய் அடைந்தவராய் தேவகுருவாகிய பிரகஸ்பதியை நினைத்தார், நினைத்த மாத்திரத்தில் எதிரில் வந்து நிற்க அவரிடம் யாவற்றையுஞ்சொல்ல அவரதற்கு எருக்கம்பருத்தியை அத்திபாலில் தோய்த்து கட்டினால் நன்றாய் விடுமென்றுசொன்னார் ஒருநாள் மருந்தைக்கொண்டுவருவதற்காக ஸ்வாமி காலையில் புறப்பட்டுப்போக அச்சமயத்தில் வராஹஸ்வாமி விரஷபாசுரனைக்கொன்று கோபத்துடன்வர எதிரில் ஸ்ரீ ஹரி நரரூபமாக நின்றிருப்பதைப்பார்த்து இவரும் ஓர் ராக்ஷஸனென்றெண்ணி அவரை பின்தொடர்ந்தார். அப்பொழுது ஹரி சமீபத்திலிருந்த ஓர் புத்தில் பிரவேசித்தார். வராஹமூர்த்தியவ்விடம் வந்தவர் ஸ்ரீ ஹரியென்றறிந்து சங்கதிகளெல்லாம் தெரிந்துகொண்டு அவரு

க்கு நூறடியிடம் கொடுக்கிறதாகவும் அதற்கு கிரயம் கொடுக்கவேனு மெனவும் கேட்டார். அதை கேட்ட ஹரி தன்னை லக்ஷ்மிதேவி விட்டு கொல்லாபுரம் போய்விட்டாளென்றும் அதனால் தன்னிடம் பொருள் யில்லையென்றும் ஜனங்களிடம் சாமான்னிய நரனைப்போல் பிச்சை யெடுத்து கடன்கொடுக்கிறேனென்றும் தான் ஜனங்களை வரவழைத்து உங்கள் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து உங்களை கும்பிட்டு காணிக்கைக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்கிறேனென்றும், முன்போஜனம் உங் களுக்கு கொடுத்து பின்னால் நான்புசிப்பேனென்றும் சொல்ல வராஹ ஸாமிகேட்டு சந்தோஷப்பட்டவராய், நூறடிநிலம் அளந்துக்கொடுத்தார் தன்னிடம் சமயல் செய்துவருகிற வகுளமாலிகை என்பவளை ஸ்ரீ ஹரிக்கு உபசரணை செய்யும்படி நேமித்தார்.

## வகுளமாலிகை யென்பவள் யார்.

த்வாபரயுகத்தில் கம்ஸன், சாணூர், பகாசுரன், சிசுபாலன் முதலிய துன்மார்க்கரை ஸம்ஹரித்து சன்மார்க்கரை ரக்ஷிக்கும்பொருட் டாக ஸ்ரீஹரி கிருஷ்ணவதாரம் யெடுத்தபொழுது அவர் லீலாவதார திருவிளையாடல்களை பார்த்து ஆனந்தித்துகொண்டிருந்த யசோதா தேவி குணானுபந்தத்தால் பிரம்மதேவர் வகுளமாலிகையாக சிருஷ்டி த்து வராஹஸ்வாமி சன்னதியில் சேவை செய்துக்கொண்டிருக்கும்படி நேமித்தார்.

## லக்ஷ்மிதேவி ஹரியுடன் சந்தித்தல்.

திருமூர்த்திகளை பரீக்ஷிக்கும் பொருட்டாக பிருகுமாமுனி ஸ்ரீ ஹரியின்மார்பில் உதைத்தார். மார்பில் யிருந்த லக்ஷ்மிதேவி மிகவும் கோபங்கொண்டு ஸ்ரீ ஹரியைநோக்கி இவ்வாருசொன்னாள் ஓஸ்வாமி, மார்பிலுதைத்த பிருகுமாமுனியின்பேரில் கோபம் எள்ளளவாகிலும் கொள்ளாமல் சந்தோஷப்பட்டுக்கொண்டு ஸன்மானித்தீர். ஆகையால் உங்கள் சரணாரவிந்தங்களை நினைத்துக்கொண்டு எவ்விடமாவது போய் விடுவேன். சர்வபூதங்களில் நிரைந்திருக்கும் பரம்பொருளென்றெண் ணாமல் கெர்வத்தினால் உதைத்த பிருகுவை தண்டிக்காமல் போனீர். ஆகையால் எம்மனதுக்கு இந்தகாரியம் எவ்வளவுமாத்திரமும் ஒப்பாது நான் எங்கே யாவது போய்விடுவேனென்று மிகுந்த கோபமுள்ளவளா னாள். அதற்கு ஸ்ரீஹரி லக்ஷ்மிதேவியைப்பார்த்து ஒ லக்ஷ்மி நீஇவ்வித மாக கோபம் அடைவது தக்கதல்ல பிரம்மதேவனுக்கு குமாரனான பிருகு உனக்கு பேரனாய் இருக்கின்றான். பிள்ளைக்கு பிள்ளையாகிய பிருகுவின் பாதம்பட்டதினால் என்ன குறையுண்டாகும். கெற்பத்தில் குழந்தை உதைத்தால் தாயுக்கு கோபமுண்டாகுவது தர்மமோ, ஆண் டபிண்டசராசரங்களை கர்ப்பத்தில் தரித்திருக்கும் நாம்பக்தர்களுடைய

சிறியகுற்றங்களை மன்னிக்காமல்போவது நியாமாகுமோ இதல்லாமல் பிருகுமகாபிராம்மண சிரேஷ்டன் தபசிகளில் சிறந்தவன் தத்வஞானி. உண்மையான பக்தியை என்மேல் நிருத்தின அன்பன், ஆகையால் நீ அவன்செய்ததை குற்றமென்றெண்ணுயல் க்ஷமித்து சமந்தமுள்ளவளாவாய் ஸ்ரீஹரி எவ்வளவு சொல்லியும் கேழ்க்காமல் கோபங்கொண்டு லக்ஷிமிதேவி வைகுண்டத்தைவிட்டு கொல்லாபுரம் சேர்ந்தாள். அப்புரவாசிகள் அந்த ஜெகன்மாதாவை அனேக விதங்களாக பக்திபூர்வகமாய் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள்.

## பத்மாவதி ஜனனம்.

சந்திரகுலத்தில் பாண்டவ யதளஹித்திர வம்சத்தில் ஸுவீரன் யென்னும் ஓர் ராஜனுக்கு சுதர்மனென்றோர் புத்திரனிருந்தான். அவன்பிள்ளையில்லாமல் வெகுகாலம் ஸ்ரீவெங்கடேச்வரஸ்வாமியை நோக்கி தவம்செய்ய ஆகாசராஜனென்றோர் பிள்ளையை அடைந்தான். அவன் தரணிதேவியெனும் ஒருபெண்ணை விவாஹம்செய்து அனேக காலம்சுகமாய்வாழ்ந்தான். அவனுக்கு பிள்ளையில்லாமல் வெகுகாலம் சிந்தித்து பிறகு தன்குருவாகிய பிருகஸ்பதியை கண்டு குறைகளைச் சொல்ல அவர் புத்திரகாமேஷ்டியாகம் செய்தால் ஸந்தானம் உண்டாகுமென அதற்கு எக்கியசாலையை வருகையில் ஓர் தாமாமலரும் அதினிடமாகஒரு திவ்யஸௌந்தரியமங்கிள கனகவிக்ரஹதைப்போன்ற ஓர் பெண்குழந்தையும் பார்த்தார்கள். ஆகாசராஜன் அக்குழந்தையை தன் பத்தினியிடம் கொடுத்து மிகவும் பிரீதியுடன் வளர்த்துக்கொண்டிருந்தான் காமரபத்மத்தில் உண்டானதாகையால் அந்த பெண்ணுக்கு பத்மாவதியென்று பேரளித்தார். பிறகு இந்த ராஜனுக்கு வஸுதானென்றோர் பிள்ளைபிறந்தான். சிலநாளைக்கு பத்மாவதி பருவமுடையவளாய் ஒருநாள் தன்தோழிமார்களுடன் புஷ்பவனத்தில் பூமலர்கொய்து கொண்டிருந்தாள்.

## வேங்கடேஸ்வரர் பத்மாவதியை சந்தித்தல்

இப்படியிருக்கையில் புகிலிருந்தபெருமான் வேட்டையாட யெண்ணினார் அப்பொழுது ஓர் வெள்ளைகுதிரையைக்கண்டு அதன்மீது ஏறிப் புறப்பட்டார், எதிரில் ஓர்காட்டானையைப் பார்த்து அதைத்துரத்திபின் சென்றார். அந்தயானை வெகுதூரம் ஓடி பிறகு திரும்பி சரணம்செய்து ஓ ஸ்வாமி அடியேனை காருமென அப்பரந்தாமன் அதைகாத்தருளி திரும்புகையில் அவ்விடம் பூமலர் கொய்துக் கொண்டிருந்த பத்மாவதியைக்கண்டார் குதிரையினின்றிறங்கி பத்மாவதியினிடஞ் செல்லுகையில் பத்மாவதிதன் தோழிகளைவிட்டுயாரென விசாரிக்கச்சொன்

குலமெனவும்.வசுதேவன் தேவகிதேவிதாய்தந்தைகளெனவும் தன்பேர் கிருஷ்ணனெனவும் கூறபத்மாவதிசேட்டு தன்வரலாற்றையும் தெரிவித்தாள். அப்பொழுது எம்பெருமான் தனைவிவாஹம் செய்துகொள்ளும் படிசேட்டார், அதற்குபத்மாவதி கோபங்கொண்டு தன்தோழிகளால் அடிக்கச்செய்தாள். எம்பெருமான் அவ்வடிகளை பொருக்கமாட்டாமல் திரும்பிவெங்கடாத்திரிக்கு வந்து துயரத்துடன் இருந்தார்.

## வகுளமாலிகை தூது அனுப்புதல்

புற்றில்சேர்ந்து பத்மாவதியை நினைத்துக்கொண்டு மவுனமாய் இருந்த ஹரியை வகுளமாலிகைகண்டு விசாரித்து அவர் மனேஅபிப்ராயத்தை த்தெரிந்து ஸ்வாமி நான் எவ்விதமாகிலும் பத்மாவதியை உங்கள்மீது பிரியமுள்ளவளாகும்படி செய்வேனென்றுசொல்லி ஸ்வாமியின் உத்திரவு பெற்றுக்கொண்டு ஆகாசராஜன் பட்டணத்துக்கு புரப்ப பட்டாள். வகுளமாலிகை அப்பட்டணத்திற்கு வருவதற்கு முன்பாக,

## ஸ்ரீ ஹரி குறத்திவேடம் தரித்தல்

ஹரி குறத்திவேடம் தரித்துக்கொண்டு வகுளமாலிகை யுக்தியாக விவாஹபிரஸ்தாபனை செய்வாளோ செய்யமாட்டாளோ என்று சந்தோஷித்து ஆகாசராஜன் பட்டணமாகிய நாராயணபுரத்தில் பிரவேசித்து வீதிகளில் குரிச்சொல்லுவேன் என்றும் பச்சைகுத்து வேன் என்றும்கூறினர். இப்படி இருக்க நாராயணவனத்தில் பத்மா வதிநந்தவனத்தில் ஹரியைக்கண்டது முதல் தாபஜ்வரமுள்ளவளாய் அன்னபானங்களின்மேல் இஷ்டமில்லாமல் விசனத்துடன் இருந்தாள். அதைதெரிந்து தாய்தந்தைகளாகிய தரணிதேவியும் ஆகாசராஜனும் மிகவும் விசாரப்பட்டு பிராம்மணேத்தவர்களை வரவழைத்து பத்மாவதி யின் நிஜஸ்திதியை சொல்ல அவர்கள்ருத்திராபிஷேகம் செய்து அஜ்ஜலத்தைகொடுத்தால் தாபஜவரம்நீங்குமென்றார் அப்பொழுது அரசன் அபிஷேகம்செய்வதற்கு ஏர்பாடு செய்ய கோவிலிடம் அனேக சுமங்கலிஸ்திரீகள் வந்துசேர அவர்களோடு வகுளமாலிகை சேர்ந்து க்கொண்டு தன்னையும் தரணிதேவியிடத்திற்கு இட்டுக்கொண்டு போகும்படிகேட்டுக்கொண்டாள். இப்படியிருக்க ஊரில் குரத்திகுரி சொல்லுகிறதென்றுதரணிதேவி கேள்விபட்டு குரத்தியைவரவழைத்தா ள்தரணிதேவிகுரத்தியை தனக்கு குரிசொல்லும் படிகேட்கஅதற்கு குரத்திவேடம் பூண்ட ஹரி இவ்வாறுசொல்லதொடங்கினர். உன் எண்ணமானது கைகூடிவரும் நீஉன் பெண்குழந்தைபேரில் ஒரு எண்ணம் கொண்டிருக்கிருய். அவள்பூந்தோட்டத்தில் ஒரு புருஷனைக் கண்டு அதனல் தாபஜ்வரமடைந்தாள். அந்தபுருஷன் யாரெனன பொன்மலையின் பேரில்பட்ட நாமத்தைதரித்துக்கொண்டு சரணமடைந் தவர்களை ரக்ஷித்துகொண்டும் தருமவிரோதிகளை நசிக்கச்செய்து

கொண்டிருப்பார் அவர் ஸ்ரீ மந்நாராயணயரே தவிரநரனல்ல. அவர் உன் பெண்ணைவிவாகம்செய்வதற்கு எண்ணம் கொண்டிருக்கிறான். உன்பெண்ணும்அவர்பேரில் பிரியம்கொண்டிருக்கிறாள். ஆகையால் அவருக்குஉன்பெண்ணை கொடுத்துவிவாகம்செய்தால்சுசமாய் வாழ்வாள் இன்னும்கொஞ்சம் நேரத்தில் கல்யாணபிரஸ்தாபனை செய்வதர்காக ஓர் பெண்பிள்ளை வருவாள் நான்சொன்னதெல்லாம் உண்மையான பிறகுஇனாம்வாங்கி கொள்ளுகிறேனென்று சொல்லி எழுந்து அப்புறம் போய் தன் நிஜரூபத்தைகொண்டு ஸ்ரீ ஹரி திருவேங்கடமலையை சேர்ந்தார்.

## வகுளமாலிகை கல்யாண பிரஸ்தாபனை செய்தல்.

ருத்திராபிஷேகத்தின் தீர்த்தத்தை சுமங்கலி ஸ்திரிகள் தரணி தேவியினிடம் கொண்டுவர அதைதரணிதேவி பத்மாவதி தேவிக்கு கொடுத்தாள். வகுளமாலிகை சுமங்கலிஸ்திரீகளை கூட்டிவந்து தரணி தேவியைப்பார்த்து நமஸ்கரிக்க தரணிதேவிநீயாரெனவிசாரிக்க அதற்கு வகுளமாலிகை இவ்வாறுசொல்லுகிறாள்: ஓதரணிதேவி நான் திருப்ப தியிலிருக்கும்வெங்கடாசலபதி அனுப்பிவந்தேன். கல்யாணவிஷய மாய்என்னை அவர் அனுப்பினார். உன்பெண்ணாகிய பத்மாவதியை அவருக்குகொடுத்து விவாகம்செய்யும்படி பிரார்த்திக்கிறேன். என் பேர் வகுளமாலிகையென்றாள். அதற்கு தரணிதேவி அவர்குலகோத் திரங்கள்என்னவென்றுகேட்கவகுளமாலிகை அவர் தாய்தந்தை தேவகி வசுதேவரென்றும் அவர் வம்சம் சந்திரவம்சமென்றும் வசிஷ்ட கோத்திரமென்றும் அவர்ரூபலாவண்ணியத்தில் மன்மதனைப்பெற்றெடு த்தமகா பிரகாச வைபவமுள்ள ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் போன்ற வரென்றும் சொன்னாள். அதைக்கேட்ட தரணிதேவி மிகுந்த சந்தோஷத்துடன் பர்த்தவுக்கு தெரிவிக்க அவரும் மகாபாக்கியமென்று சம்மதித்து. விவாகத்திற்கு லக்கினம் ஏற்பாடுசெய்ய தன்குருவாகிய சுகமகரிஷியை வரவழைத்து கல்யாணபத்திரிகையை எழுதினார் அப்பத்திரிகையில் மஞ்சள்தடவி சுகரிடம் கொடுத்து அனுப்பித்தார். அதை சுகர் எடுத்துக்கொண்டுபோய் வேங்கடமலையின்பேரில் எழுந்த ருளியபரந்தாமன்கையில்கொடுக்க அவரதைப்படித்து வளர் பிறை தசமிராத்திரி சுபமுகூர்த்தத்திற்கு நாங்கள் இஷ்டஜனபந்து சமேதர் களாய் அவ்விடம் வருகிறோமென்று எழுதி சுகரிடம் கொடுத்தனுப்பி விட்டார்.

## பத்மாவதி விவாக மகோற்சவம்.

இந்த செதி கருத்மந்தனும் தேவகோடிகளுக்கு தெரிவிக்க பிரம்மதேவர் சாவித்திரி, காயத்திரி, ஸரஸ்வதி சமேதராய் அம்ஸ வாகனமேரியும், பரமேஸ்வரர் பார்வதிசமேதராய் நந்திவாகன

மேரியும், திக்பாலகர்களும், மகரிஷிகளும், தேவகணங்களும், இந்திரன் சூரிய சந்திர முதலியவர்கள் திருவேங்கடமலைக்குவந்து சேர்ந்தார்கள். அப்பொழுது வசிஷ்டர்வராகஸ்வாமி சன்னதியில் யக்கிய காரியங்களை ச்செய்து வந்தார். பிரம்மதேவர் கல்யாணபீடத்தை நிர்மித்தார். பார்வதி முதலியவர்கள் ஸ்வாமிக்கு அப்பியங்கினம் செய்வதற்காக ஹரியை கூப்பிட அவர் லக்ஷ்மிதேவி விவாகத்திற்கு வராதகுறையை தெரிவிக்க சூரியனை லோகமாதாவாகிய லக்ஷ்மிதேவியை அழைத்துக்கொண்டு வருவதற்கு கொல்லாபுரம் அனுப்பித்தார்கள். சூரியன் லக்ஷ்மியம்மனை அழைத்துக் கொண்டுவந்து சேர்ந்தான்.

## குபேரனிடம் கடன் வாங்குதல்.

கல்யாண செலவுக்காக பணம் வேண்டுமே யென்று சிந்தித்து பிறகு குபேரனிடம் 1 கோடி பதினொன்றுலக்ஷம் 1,1400000 பணம் வாங்கி அதற்கு வருஷந்தோறும் வட்டி கட்டும்படியாகவும் கலியுகம் முடிவில் அசலை கொடுக்கும்படியாகவும் பத்திரம். எழுதி அதற்கு சங்கரனும், பிரம்மாவும், சாக்ஷிகளாக, ஏற்பாடுசெய்யப்பட்டது. இதனால் வேங்கடேசப்பெருமாள் வட்டிகாசு பெருமாளென்று பேருள்ளவராய் பிரார்த்தனை மூலமாக ஜனங்களிடம் பணம் வாங்குவார்.

## ஸ்ரீ ஹரி நாராயணபுரம் சேருதல்

அப்பொழுது அருந்ததி முதலிய ஸ்ரீரத்தினங்கள் சோபன பாட்டுகளை பாடமங்களவாத்தியங்கள் சப்திக்கமகாலக்ஷ்மியும் பார்வதி சாவித்திரி சரஸ்வதி இந்திராணிமுதலியவர்கள் ஆலத்திஎடுக்க குமாரஸ்வாமி பாண்டவதீர்த்தம் முதல் ஸ்ரீசைலம் வரையிலும் இருக்கும் ஸ்தலத்தை பரிசுத்தம் செய்ய வாயுதேவனும் பிரம்மாவும் தேவேந்திரன் முதலிய சகல தேவகணங்கள்கூடி அவரவர்களுடைய வாகனங்களேறி ஸ்ரீஹரி யுடன் புறப்பட்டு நாராயணபுரம்வர ஆகாசராஜன் மந்திரிபரிவாரங்க ளோடுஎதிர்நோக்கிப்போய் அவர்களை அழைத்து விவாகமகோற்சவத் தைஅத்யத்புதமாக நடத்தசர்வதேவகணங்கள் புஷ்பவருஷங்களை அபார மாகவருஷித்தார்கள். சொல்ல முடியாத வைபவத்துடன் விவாகம கோற்சவம்நடந்தேற ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் பத்மாவதியுடன் கூடி தங்கமலையாகிய திருவேங்கடமலையைச் சேர்ந்துமிகுந்த வைபவத் துடன் கிரீடித்துக்கொண்டிருந்தார்

## ஸ்ரீ பத்மாவதியின் பூர்வ விர்த்தாந்தம்

பூர்வத்தில் ஸ்ரீ ராமர் தன் தகப்பனை தசரதமகாராஜாவின் கட்டளைப்படி சீதாலக்ஷ்மணசமேதராய் காட்டிற்குப் போகையில் பொன்மானைக்கண்டு சீதை அது வேண்டுமென ராமர் அந்தமானை துரத்திக்கொண்டுபோக இதுநல்லசமயமென்றறிந்து சீதாதேவியை இராவணன்எடுத்து இரதத்தின்பேரில்வைத்துக்கொண்டு போகையில்

சீதை இராமாயென்று அழ அதை அக்னிபகவான்கேட்டு இராவணனை ப்பார்த்து நீ எடுத்துக்கொண்டு போவது உண்மையானசீதையால் சீதாரூபத்தை உண்டாக்கி பிராம்மணகன்னிகையை ராமர் அவ்விடத்தில் நிருத்தினார் உண்மையா சீதை என்னிடம் விட்டுபோனாரென்று சொல்ல அந்தமூடன் நம்பி சீதாதேவியைவிட்டு சீதையைப்போல் வேடம்பூண்ட வேதவதியை கொண்டுபோய்விட்டான். பிறகு இராமர் இலங்கைக்குப்போய் ராவணனைக்கொன்று சிறையிலிருந்த சீதையை விடுதலைசெய்து, நீ அக்கினியில் பிரவேசித்தாலொழிய உன்னை கைப்பிடியேனென அவ்விதமாகவே அக்கினியில் பிரவேசிக்கையில் இரண்டு சீதைகள் இருப்பதைக்கண்டு ராமர் ஜானகி தேவியைப்பார்த்து, அந்த விபரத்தை சொல்லும்படி கேட்கசீதை அப்பொழுது விஸ்தாரமா சொல்லி தனக்காக ராவணன் சிரையில் அநந்த கஷ்டங்களை அனுபவித்தவேதவதியை விவாகம்செய்துகொள்ளும்படி பிரார்த்தித்தார்கள். ராமர் அதற்கு நான் ஏகபத்தினி விரதனென்றும், கலியுகத்தில்பக்தரக்ஷணை செய்வதற்கு வெங்கடாசலத்தில் அவதரிப்பேனென்றும், அப்பொழுது இக்கன்னிகையை விவாகம் கொள்வேனென்று சொன்னாராகையால் அந்த விப்ரகன்னிகை பத்மாவதியாய் இருந்தாள்.

## ஸ்ரீ திருச்சானூர் மகத்துவம்.

அநேககாலம் ஸ்ரீவெங்கடாசலத்தில் பத்மாவதி தேவியுடன் கூடி கிரீடித்துக்கொண்டு இருந்தும் லோகமாதாவாகிய லக்ஷ்மியம்மன் மார்பில் இல்லாதகுரையினால் ஸ்ரீமகாவிஷ்ணு சிந்தையுள்ளவராய் ஸ்ரீலக்ஷ்மிதேவியை தேடவேண்டுமென்கிற உத்தேசம் கொண்டு பத்மாவதிக்கு சமாதானம் சொல்லி கொல்லாபுரத்திற்கு புரப்பட்டார் ஸ்ரீமகாவிஷ்ணுதன்னை தேடவருகிறாரென்றறிந்து, நேரில் ஸ்வாமி வந்து கூப்பிட்டால் வரமாட்டேனென்று சொல்லுவதுமரியாதையாகதென்றெண்ணி கொல்லாபுரத்தைவிட்டு பாதாளலோகத்தில் விசேஷயோகமகிமையினால் பிரகாசித்துக்கொண்டிருக்கும் கபிலமாமுனியின் ஆஸ்ரமத்தை போய்ச்சேர்ந்தாள்

## ஸ்ரீ ஹரி தவம் செய்தல்.

பிறகு ஸ்ரீமந்நாராயணன் கொல்லாபுரத்திற்குபோய் லக்ஷ்மி காணமல் போனதைப்பற்றி மிகுந்த விசனப்பட்டுக்கொண்டு காடுமேடுகளும் குகைகளும் தேடி, மறுபடியும் கொல்லாபுரம் சென்று பூர்வத்தில் அகஸ்த்தியமாமுனி பூஜித்துத்துக் கொண்டிருந்த லக்ஷ்மி விக்ரகத்தைப் பார்த்து மோகமடைந்து 10 வருடம்தவம்செய்துக் கொண்டிருந்தார் ஒருநாள் ஸ்ரீலக்ஷ்மியைநோக்கிசிந்தித்துக் கொண்டிருக்கையில் அசரீரவானி அவரைப்பார்த்து இவ்விதமாகசொல்லத் தொடங்கினாள், ஸ்வாமி நீர் இவ்விடத்தில் தெற்கில் கிருஷ்ணவேணி ஆற்றிற்கு அப்புரத்தில் சுவர்ணமுகிஆற்றிற்குவடக்கில் சுகாஸ்ரமத்தில்

தாமரைகமலங்களைவரவழைத்து திருகுளத்தைவெட்டி அதில் அவைகளை பிரகாசிக்கசெய்து வாடாமல் இருப்பதற்காக அக்குளத்திற்கு கிழக்கில் சூரியனை பிரதிஷ்டைசெய்து அந்தகமலத்தின்பேரில் திருஷ்டியைநிறுத்தி மனதில் லக்ஷ்மிமந்திரத்தை தியானித்தக்கொண்டுதவம் செய்தால் லக்ஷ்மிதேவி பிரஸன்னமாய் உன்னை மருபடியும் அடையுமென்றுசொல்ல அசரிரவாணி வாக்கின்படிக்கே அகஸ்தியாஸ்ரமம் தழியாய்ப்போம் சுகாஸ்ரமத்தை சேர்ந்து வாயுபகவானை தியானிக்க அவர் பிரஸன்னராய் அஞ்சலிபந்தராய்நிற்க யவரை ஸ்வாமிகண்டு ஓ மாருதி நீதேவலோகம் சென்று தேவேந்திரனைகண்டு மந்தாகினியிலிருக்கும் ஸ்ரேஷ்டமான பத்மங்களைக்கொண்டுவந்து தரவேணுமெனவாயு தேவன் யவ்விதமாகவே கொண்டுவர யவரைப்பார்த்து இந்த ஸவிஸ்தாரத்தை யாருக்கும்தெரியப்படுத்த வேண்டாமென அப்படியே சம்மதித்து வாயுபகவான் மறைந்தார் பிறகு தன்கையிலிருக்கும் குந்தலாயுதத்தினால் ஒரு குளத்தைவெட்டியந்ததாமரை கமலங்களை யக்குளத்தில்விட்டு இரவுபகலும் மலர்ந்திருக்கும் பொருட்டு கிழக்கில் சூரியநாராயணதேவாலயத்தை பிரதிஷ்டைசெய்து பன்னிரெண்டு வருடம் ராஜனைப்போல் வேடம்தரித்து தவம்செய்தார்.

## ரம்பாதிகள் ஹரியை சோதித்தல்.

தேவேந்திரன் பூமியில் யாரோயரசன் கோரமாக தவம்செய்து தன்னுடைய பதவிக்குவா யென்னுகிருனென்று சங்கையுள்ளவனாய் ரம்பா, ஊர்வசி, திலோத்தமை என்கிற தேவதாசிகளை தவத்தை பங்கப்படுத்தயனுபித்தான் அவர்கள் ஸ்ரீஹரி தவம் செய்யுமிடத்திற்கு வந்து புஷ்பங்களை கொய்துக்கொண்டும் கிளிகளைப்போல் கலகலவென்று பேசிக்கொண்டும் பகபகவென்று சிரித்துக்கொண்டும் அநேக விதங்களாக மாய்கைசெய்தார்கள். அதை ஸ்ரீஹரி தெரிந்துக்கொண்டு மந்தஹாஸராய் களிக்காமல் ஸ்வர்ண ஸஹஸ்தான பத்மத்தின்பேரில் மனத்தை நிருத்தியிருந்தார். அப்பொழுது அக்காந்தாமணிகள் ஸ்ரீஹரியைமோகித்து அவர்பேரில் புஷ்பங்களை வீசியும், பரிஹாஸத்தோடு நகைத்துகொண்டும், நாட்டியங்கள் செய்துகொண்டும் மனதைரமிக்கும்படியான பாட்டுகளை பாடிக்கொண்டும் வீணைகள் வாசித்தாகொண்டு அநேக லீலாவிநோதங்களைச்செய்தும் ஸ்ரீஹரி சலிக்காமல் இருக்கிறதைப்பார்த்து அலண்டு ஆச்சர்யமடைந்தார்கள்.

## ஸ்ரீஹருமோஹினி தேவதையை சிருஷ்டி செய்தல்.

ஸ்ரீமந்நாராயணன் அப்பொழுது மோகினிதேவதையை சிருஷ்டித்து தன்னிடமிருக்கும்படி கட்டளையிட்டார். ரம்பாதிகள் அந்த மோஹனிதேவதையின் ரூபலாவண்யங்களைப்பார்த்து வெட்கப்பட்டு தேவேந்திரனிடம்சென்று ஸ்வாமி அவர் நரரல்ல சாக்ஷாத் நாராயணமூர்த்தியே

என்பதற்கு சந்தேகமில்லையென்று சொல்ல தேவேந்திரன் ஸ்ரீஹரியை நானெணவெண்ண பரிசோதித்தது அபசாரமென்று விசாரப்பட்டான். பிறகு ஸ்ரீஹரி மோகினிதேவதையைப்பார்த்து நீ அங்கங்கு பக்தர்களால் பூஜிக்கப்பட்டிருந்து, யதாகதியை அடைவாயென்று சொல்லி அசையாமல் தவஞ்செய்துக்கொண்டிருந்தார்

## லக்ஷ்மி கபில சம்வாதம்.

கபிலமாமுனிவரைப்பார்த்து லக்ஷ்மிதேவி தனக்காக ஸ்ரீஹரி தவஞ்செய்கிறார். என்னசெய்வேனென்று சிந்திக்கையில் கபிலாமுனி லக்ஷ்மிதேவிக்கு ஸ்ரீஹரியின்பேரில் கோபமுண்டானதற்கு காரணமென்னவென்றுகேட்டு தெரிந்துக்கொண்டு இவ்விதமாக சொன்னார். என்னை பெற்றதாயே, பிள்ளைக்கு பிள்ளையாகிய பிருகுவின்பேரில் இவ்வளவுகோபம் உண்டாயிருப்பது நியாயமல்லவும் மூர்த்திகளைப் பரிக்ஷித்து ஸ்ரீஹரியின் பிரபாவத்தை பிரக்யாதி செய்வதற்காக பிருகு அவ்விதமாய் நடந்தான். மேலும் ஸ்ரீஹரியை இவ்விதமாக கஷ்டப்படும்படி செய்தும் உன்னைநோக்கி இவ்வளவு தவஞ்செய்யும்படி செய்வித்தும் பதிவிரதைகளுக்கு தர்மமல்ல, ஆகையால் தாயே நீ ஸ்ரீஹரி மனதை நிறுத்திருக்கும் கமலத்தில் தொடர்ந்து முல்லோகங்களும் முப்பத்து முக்கோடி தேவர்களும் மெச்சி கீர்த்தனைகள்பாட அந்தஎம்பெருமான் திருவக்ஷத்தில் சேர்வாய். நான்சொன்னது நியாயமானபடியால் மன்னிக்கவேணுமென லக்ஷ்மியம்மன் ஸ்ரீஹரியை விட்டுவந்தது தன்னுடைய தப்பிதமென்றெண்ணி அந்த ஜகதீசனான எம்பெருமானை மறுபடியும் சேர நிச்சயித்தாள்.

## அலர்மங்கா தேவியின் பிறப்பு,

ஸ்ரீஹரி மனதை நிறுத்திருக்கும் தாமரையின் வழியாக ஸ்ரீஹரி தவஞ்செய்த பதிமூன்றும் வருடத்தில் கார்த்திகைமாதம் சுத்தபஞ்சமி உத்திராடம் கூடிய வெள்ளிகிழமை சுபதினத்தில் மகாசௌந்தர்ய லாவண்ணிய பிரகாசத்தோடு பதினாறுவயதுள்ள யவ்வனகன்னிகா ரூபத்தைதரித்த நாலுகைகளுடனும் கமலத்தையும் புஷ்பமாலையும் தரித்துக்கொண்டு பிரசன்னமாகையில் ஆகாயத்தில் பிரம்மாதி தேவர்கள் புஷ்பங்களை வருஷித்தார்கள். அப்ஸரஸாதி தேவதாஸிகள் வீணாதிகான நிருத்தியங்கள் செய்து ஜெய ஜெய லக்ஷ்மி அலர்மங்காதேவியென்று கொண்டாடினார்கள்.

## லக்ஷ்மி ஹரியை அடைதல்.

லக்ஷிமியம்மன் பேசாமல் நிற்பதைப்பார்த்து பிரம்மாதி தெய்வங்கள் அந்த சுபலக்னமே ஜெகதீசனுடைய திருமார்பில் சேருவதற்கு

நல்லகாலமென்று பிருகுவுக்குசைகை செய்தார்கள். அப்பொழுது பிருகுமுன்வந்து என்னைபெற்ற தாயே, நான்செய்த குற்றங்களை மன்னிக்க வேண்டும். சரணாகதன், கருணையெனும்கடலை உன் கண்களில்தரித்தகமலால் பாபெற்றதாயேசரண னென்றேனெந்த அகுற்றங்களாவற்றும் க்ஷமித்து காத்தருவாய் தரணியில் தான் பெற்ற பிள்ளைகள் செய்திடும் தப்பிதம்தாயல்லவோ மரந்திட்டுசிரியேனைமன்னிக்க வேண்டுமெதுமாத நீயாததோ என்று சொல்ல லக்ஷிமி தேவிக்கு ஆனந்தசந்தோஷமுண்டாய்விட்டது. அப்பொழுது ஸ்ரீலக்ஷ்மியை, ஹரியை சேருமென்று புரம்மாதி தேவகணங்கள், மலர்ந்திட்ட கமலத்தில் மங்கையாய் தங்கமாய் மாணிக்கமணியுமாயும அலாமேல்தேவியென யனைவருங்கொண்டாட யகிலாண்டகோடியெல்லாம், கலகலென்றுனந்த கடலிலேமூழ்கவே கருணையோடெங்கள்தாயே நிலமாக ஹரி மார்பில்நிலையாக குடிகொண்டு நின்றுவாழ்ந்தருள்வாயே என்றுஸ்தோத்திரம்செய்ய லக்ஷ்மி கையிலிருந்த பூமாலையை பகவான் கழுத்தில் தரித்து மறுபடியும் வக்ஷத்தில் சேர்ந்தாள்.

இவ்விஷயம் பத்மபுராணத்தில் அடியில்வருமாறு எழுதப்பட்டிருக்கிறது. இந்தபோதம் கல்பாந்திரவிவஸ்தையினால் ஏற்பட்டதென்றறியலாம். பிறகு மகாவிஷ்ணு மார்பை உதைத்தபோது லக்ஷிமிதேவி பாதாளத்திற்குச்சென்று கபிலமகாரிஷியால் பூஜிக்கப்பட்டு பிறகு கொல்லாபுரம்போய் வேங்கடன்மலைக்கு தென்பாகத்தில் சுவர்ணமுகிநதிதீரத்திலிருக்கும் சுகாஸ்ரமத்தில் ஏகாந்தமாய் வசித்துவந்தாள். வெங்கடேஸ்வரர் லக்ஷ்மிதேவியைத்தேடிக்கொண்டு அசரீரவாக்கினால் லக்ஷ்மிதேவி இருப்பிடம் தெரிந்து அந்தசுகாஸ்ரமத்திற்குச்சென்று தன்கையிலிருக்கும் குந்தலாயுதத்தினால் ஒருகுளத்தை நிர்மித்து தேவலோகத்திலிருக்கும் பத்மசரோவரத்திலிருந்து தங்கமயமான தாமர புஷ்பங்களைக் கொண்டுவந்து அந்தகுளத்தில்போட்டு அந்தபுஷ்பங்கள் இரவும்பகலும் மலர்ந்திருக்கும்பொருட்டு அவ்விடத்தில் சூரியநாராயண தேவாலயமொன்றை பிரதிஷ்டைசெய்து பனிரெண்டுவருஷம் லக்ஷ்மி உபாசனைசெய்துக்கொண்டு லக்ஷமி மந்திரத்தை ஜெபித்து தவம் செய்தார். பதிமூன்றுவது வருடம் கார்த்திக சுத்தபஞ்சமி சுக்கிரவாரம் உத்திராநக்ஷத்திர தினத்தில் லக்ஷிமிதேவி அலர்மேல்மங்கை அனேக தாசிஜனங்களுடன் சர்வாபரண பூஷிதயாய் ஆகாயத்தினின்று தேவதைகள் புஷ்பவருஷம் வருஷிக்க ரம்பைமுதலிய அப்ஸரஸ்திரீகள் காட்டியமாட கந்தருவர்கள் கீதங்கள்பாட தாமரை புஷ்பத்தினின்று 16 வயதுள்ள யௌவனஸ்திரீயாக உற்பித்து சுவாமியைக்கண்டு தான்கொண்டுவந்த நீலோத்பலபுஷ்பமாலையை சர்வலோகசரண்யராகிய அவர் கழுத்தில் சாத்தி ஆலிங்கனம் செய்துக்கொண்டு அவ்விடத்திலே இருக்கும்படியாக விரும்பினாள்.

## ஸ்ரீ திருச்சானூர் அலர்மேல்மங்காபுரம்

ஸ்ரீ லக்ஷிமியம்மன் அவதரித்த தாமரைகுளமாகையால் இதற்கு பத்மசரோவரதீர்த்தமென்று பெயர் உண்டாயிற்று ஹரிவக்ஷத்தில் லக்ஷிமிபிரவேசித்த உடனே பிரம்ம ருத்திராதிகணங்கள் அந்த தீர்த்தத்தை அனேக விதங்களாக கொண்டாடி தங்கள் சிரங்களின் பேரில் ப்ரோக்ஷித்துக் கொண்டார் ஆகையால் கார்த்திகைமாதத்து சுத்த பஞ்சமி தினத்தில் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தவர்கள் லக்ஷிமி கடாக்ஷம் உள்ளவர்களாய் சகலசுகங்களை அனுபவிப்பார்கள்.

பத்மசரோவரமுள்ள இக்ஷேத்திரம் பத்மாரஜபுரமென்னும் கீழ்திருப்பதிக்கு 3 மைலில் இருக்கிறது இதுசுகாஸ்ரமம் இதில் சுகர் குமாரனுகிய சாயாசுகர்வசிப்பதாக புராணசம்மதம் ஆகையால் இதற்கு திருச்சானூரென்றும்பெயர் உண்டாயிற்று பத்மத்தில் உண்டானபடியால்லக்ஷ்மிதேவிக்கு பத்மாவதிதேவதையென்றும் மலர்ந்தபத்மத்தில் பிறந்ததினுல் அலர்மங்காதேவதை யென்றும் அந்த க்ஷேத்திரத்துக்கு அலர்மங்கரக்ஷேத்திரமென்றும் பெயருண்டாயிற்று. ஸ்ரீமகாவிஷ்ணுவினுல்பிரதிஷ்டைசெய்தசூரிய தேவாலயம் திருக்குளத்துன் கரையின்பேரில் இருக்கிறது. ஸ்ரீசுகரால் ஏற்படுத்திய ஹபலராமசமேத ஹரிவேணுகோபாலஸ்வாமி தேவாலயமும் இருக்கின்றது. ஸ்ரீசுந்தர வரதராஜப்பெருமாள் சன்னதியும் இவ்விடத்திலிருக்கின்றது. இந்த புறத்திற்கு மேற்கில் யோகிமல்லவரம் என்று ஓர் சிரியகிராமம் இருக்கின்றது. பூர்வத்தில்தபோவந்தர்கள்சங்கம் சேரும்படியான இடம் புராணநிர்மிதமான சிவதேவாலயமும் இருக்கின்றது. 1 மைல் தூரத்தில் முனிகள் பூடியென்கிற கிராமம் இருக்கின்றது. பூர்வத்தில் முனிகள்ஆஸ்ரமங்களைக்கட்டிக்கொண்டு தபோயக்கியங்கள் செய்தபடியால் இந்தபெயர்உண்டாயிற்று. திருச்சானூரில் பிரதிவருஷந்தோரும் கார்த்திகைமாதத்தில் 10 நாள் கற்பகவல்லியாகிய அலிமேலுமங்கை தேவிக்கு பிரம்மோற்சவம் பங்குனியில் 9நாள் பத்மசரோவரதீர்த்தில் தெப்பல்உற்சவமும் பிரதிவெள்ளிகிழமை தோட்டஉற்சவமும் நடந்து வருகின்றது.

## ஸ்ரீ திருப்பதி பிரம்மோற்சவம்.

ஸ்ரீ வெங்கடேஸபெருமாள் அலிமேலுமங்கா தேவியைமார்பில் அணைத்து ஸ்ரீ திருப்பதி புண்ணியக்ஷேத்திரத்தில்நிற்க தன்குமாரனுகிய பிரம்மதேவர்வந்து ஸ்வாமி உங்களுக்கு ரதோற்சவம் நடந்தவேணுமென்றுவலுடையவனுய் இருப்பதால் உத்திரவளிக்க வேண்டுமென பிரார்த்க்கையில் தன்புத்ரன் வாக்கியங்களைக்கேட்டு ஆனந்தித்தவராய் சம்மதித்தார். பிரம்மோற்சவத்தை நடத்துவதற்காக நூதன ரதத்தை செய்யும்படி விஸ்வகர்மாவுக்கு உத்திரவுசெய்தார், அந்தரதம் முடிந்த

தேமுதல்நாள்சேஷ வாகனத்தின்பேரிலும் 2-வது நாள் அன்னவாகனத்ன்பேரிலும் 3வது நாள் சிம்ஹவாகனத்தின் பேரிலும் அன்றைராத்திரி புஷ்பவாகனத்தின் பேரிலும் 4-வது நாள் பூபாலஉற்சவமும் அன்றை இராத்திரி கல்பகவிருக்ஷஉற்சவமும்5-வது நாள் ஆந்தோளி உற்சவமும் அன்றைராத்திரிகருடோற்சவமும்6-வது நாள் அனுமந்தர்கள் உற்சவமும் அன்றைமாலை வசந்தோற்சவமும் இராத்திரி யானைவாகனோற்சவமும் 7-வது நாள் காலையில் சூரியபிரப உற்சவமும் இராத்திரி சந்திரபிரப உற்சவமும்8-வது நாள் சோடச மகாதானகிருத்தியங்களை நடப்பித்து பிறகு தங்கயைப்போல் பிரகாசிக்கும் நவரத்தினசிதமாய் அனேக வர்ணங்களுடன் ஜொலித்துக்கொண்டிருக்கும் திவ்யரதத்தின். பேரில் ஸ்ரீபூமீளா சமேதராகிய வெங்கடேஸப்பெருமாளை ஆசனரூடராகி அமர்த்தி பிரம்மாதிதேவ கணங்கள் நடப்பிக்க சகலதிக்பாலர்களும் கருடகந்தர் வகின்னரகிம்புருஷ சித்தவித்யாதரர்கள் சேவிக்க தேவ துந்துபிகள் கோஷிக்க மகா அற்புதமாக ரம்பா மேனகை ஊர்வசி திலோர்த்தமாதி தேவதாசிகள் அந்த ரதத்தின்பேரில் புஷ்பங்களை இரைத்து ஆடி பாடி ஹரியை கொண்டாடினார்கள். அப்பொழுது பக்தகோடிகள் ஹரிநாமத்தை ஸ்மரித்தார்கள் கவிகள் கீர்த்தனைகளை பாடினார்கள். பண்டிதர்களும் பிராம்மணர்களும் உபநிஷத் வேதவாக்கியங்களை சாதித்தார்கள். பிராமணஸ்திரீகள் பாட்டுகளைபக்தியோடுசுவாமியைபாடி யாடி கொண்டாடினார்கள்.

அந்த ரதோற்சவத்தை பார்பதற்காக 56 தேசத்தாசர்களும் அவர்களுடைய வாகனங்களையேரி பரிவாரங்களுடன் வந்தார்கள். இவ்விதமாக அதுமுதல் புரட்டாசிமாதத்தில் உத்திராடநக்ஷத்திரத்தில் பிரதி வருஷமும் ஸ்ரீவேங்கடேஸபெருமானுக்கு பிரம்மோற்சவம் நடந்தேரிவருகிறது.

சுபம். சுபம்.



